அதிகாரப்பூர்வமான மதம் தவிர்த்து பிற மதம் சார்ந்த அனைத்து இயக்கங்களும் ஒடுக்கப்பட்டது. அவற்றை முளையிலேயே கிள்ளி எறிந்தனர், காரணம் மதம் என்பது கூட அரசுக்கு விசுவாசமானதாக இருக்க வேண்டும் என்று கருதினர். உடன்பாடு இல்லாத மதத்தை பின்பற்றுவது ஆட்சிக்கு எதிரான கலகமாக அறிவிக்கப்பட்டது.

> இறைவா! அமைதியின் மூலம் நீயே! அமைதி உன்னில் இருந்து வருகிறது! அது உன்னிடமே திரும்புகிறது! ஆக எங்களை அமைதியாக வாழச் செய்வாயாக! எங்களை சொர்க்கத்துக்குள் நுழையச் செய்வாயாக! அது அமைதியான வீடாகும்! உன் அருளைப் பெற்றதாகும்! எங்கள் இறைவா! உனக்கே எல்லா மகிமையும், கண்ணியமும்!

ஓரிறைக் கொள்கையை சொன்னதற்காக தொல்லைக்கு உள்ளாக்கப்பட்டவர்களின் பட்டியலில் இறுதியாக வந்தவர் இயேசு கிறிஸ்து ஆவார். (அவர் மீது இறைவனின் சாந்தி உண்டாகட்டும்). அதனால் சர்வாதிகார அமைப்பை மாற்றியமைக்க மதம் உள்ளிட்ட எல்லாவிதமான சுதந்திரங்களின் காலம் ஒன்றை உருவாக்குவது இறைவனின் நாட்டம், அதை நடைமுறையில் முழுமைப்படுத்தி காட்ட முஹம்மத் தூதராக அனுப்பப்பட்டார். (அவர் மீது இறைவனின் சாந்தி உண்டாகட்டும்) மற்றும் அதற்கேற்றவாறு உறுதுணையான தோழர்கள் அவருக்கு கிடைத்தார்கள்; திருக்குர்ஆனின் கட்டளை இவ்வாறு கூறுகிறது :

‘குழப்பம் முற்றிலும் ஒழிந்து மார்க்கம் அல்லாஹ்விற்கே உரித்தாகும் வரை இவர்களுடன் போர் புரியுங்கள். (அதிலிருந்து) அவர்கள் விலகிக் கொண்டால் நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் செய்வதை பார்க்கக்கூடியவனாக இருக்கின்றான்’. 08:39

## அமைதியின் மூலத்தோற்றம்

இஸ்லாம் மற்றும் வன்முறை என்பது ஒன்றுக்கு ஒன்று முரணானவை என்று கூறுவது மிகைப்படுத்துதல் அல்ல. இஸ்லாம் குறித்த அளவுகோலில் இஸ்லாமிய வன்முறை என்பது நிராகரிக்கப்பட வேண்டிய, அடிப்படையற்ற ஒன்றுமாகும். உண்மையைச் சொன்னால் வன்முறை உலகத்துக்கு பொருந்தாத நிலையாகும். இது இஸ்லாமிய நடைமுறைகளுக்கும், அதன் செயல் திட்டத்துக்கும் எதிரானதாகும். இஸ்லாம் தன்னை நிலையான மார்க்கம் என்று அறிவிக்கிறது, அது உண்மையும் கூட, அதனால் மனித வரலாற்றில் தனக்கென ஒரு இடத்தை நிலைநிறுத்திக் கொள்ள முடியாத ஒன்றான வன்முறை அதன் வடிவமாக இருக்க வாய்ப்பில்லை. வன்முறையை இஸ்லாத்துடன் இணைப்பது இஸ்லாத்தின் நிலைத்தன்மையில் ஐயம் ஏற்படுத்தும் செயலாகும்.

அதனால்தான் நபிகள் நாயகம் (ஸல்) மனப்பூர்வமாக தினந்தோறும் இவ்வாறு பிரார்த்தனை செய்தார்.

> இறைசெய்தி மட்டுமே இஸ்லாத்தின் உண்மையான, நிலையான அழைப்பு என்பதாக திருக்குர்ஆன் தெளிவாக கட்டளையிடுகிறது.

இறைவா! அமைதியின் மூலம் நீயே! அமைதி உன்னில் இருந்து வருகிறது! அது உன்னிடமே திரும்புகிறது! ஆக எங்களை அமைதியாக வாழச் செய்வாயாக! எங்களை சொர்க்கத்துக்குள் நுழையச் செய்வாயாக! அது அமைதியின் இல்லமாகும்! உன் அருளைப் பெற்றதாகும்! எங்கள் இறைவா! உனக்கே எல்லா மகிமையும், கண்ணியமும்!

- மவுலானா வஹிதுத்தீன் கான்


For more information, contact : TL 06

GOODWORD

324, Triplicane High Road,
Chennai - 600 005.
☎ +91-44-4352 4599
+91 97908 53944
✉ chennaigoodword@gmail.com

1, Nizamuddin West Market,
New Delhi - 110 013.
✉ info@goodwordbooks.com

goodwordbooks.com

www.alquranmission.org • www.wkhan.net
www.alrisala.org • www.cpsglobal.org

CPS International centre for peace & spirituality


# இஸ்லாம் கூறும் அமைதி



Peace in Islam (Tamil)

# இஸ்லாம் கூறும் அமைதி

அமைதி அதன் முழு பொருளில் உள்ள மார்க்கமே இஸ்லாம். குர்ஆன் அமைதியின் பக்கம் அழைக்கிறது. (04:128)

அது சமாதானமே சரியான வழியென்று கூறுகிறது. (05:16)

குழப்பம் செய்வதை இறைவன் வெறுக்கிறான் என்றும் கூறுகிறது (02:205)

'இஸ்லாம்' என்பதின் மூலவார்த்தை 'ஸில்ம்' அமைதி என்பதாகும். ஆகவே இஸ்லாத்தின் தத்துவமே அமைதியானதாகும். குர்ஆனின் முதல் வசனம் அமைதியின் ஊற்றிலிருந்துதான் தொடங்குகிறது

'மிக்க கருணையாளன், எல்லையற்ற இரக்கமுடையோன் அல்லாஹ்வின் பெயரால்' (01:01). இந்த வசனம் குர்ஆனில் 114 முறை திரும்ப திரும்ப வருகிறது. இதிலிருந்து இஸ்லாம் அமைதிக்கு அளிக்கும் முக்கியத்துவத்தை உணர்ந்துகொள்ளலாம். இறைவனின் பெயர்களில் 'அஸ்ஸலாம்' அமைதி என்பதும் உள்ளடங்கும். இறைத்தூதரும் மனித சமூகத்திற்கு கருணையின் வடிவமாகவே அனுப்பப் பட்டார்கள் (21:107)

குர்ஆன் இப்பிரஞ்சத்தின் ஒழுங்கமைப்பை மனித சமூகத்திற்கு ஒரு முன்மாதிரியாக எடுத்துரைக்கிறது. ஒவ்வொன்றும் தமது பணியை பிறவற்றுடன் மோதல் இல்லாமல் அமைதியாக நிறைவேற்றுகின்றன.

சூரியன் சந்திரனை அடைய முடியாது. இரவு பகலை முந்த முடியாது. ஒவ்வொன்றும் தனது வட்டப்பாதையில் நீந்திச் செல்கின்றன.

## அமைதி மார்க்கம்

கோடானகோடி ஆண்டுகளாக, இந்த முழு பிரபஞ்சமும் இறைவன் அதற்கு இட்ட கட்டளைப்படி அமைதியாகவே இயங்கி வருகிறது.

அமைதிக்கு இஸ்லாம் அளித்துள்ள முக்கியத்துவத்தை உணர இது போன்ற சில உதாரணங்களே போதுமானது. உண்மையில் இஸ்லாம் ஆன்மீக மேம்பாடு, அறிவு வளர்ச்சி, ஆளுமைப் பண்பு, சமூக சீர்த்திருத்தம், கல்வி செயல்பாடு போன்ற அழைப்பியல் பணிகளை மேற்கொள்ள அமைதி சூழ்நிலை மிக முக்கியமானது.

சிலர் அமைதியை நீதியோடு இணைத்து பேசுகின்றனர். ஆனால் இஸ்லாம் அதை அவ்வாறு அணுகுவதில்லை. இஸ்லாம் அமைதியை அமைதிக்காகவே அணுகுகிறது. இஸ்லாத்தின் படி, நீதி என்பது அமைதியின் நேரடி பலனல்ல. அமைதி என்பது நீதிக்கான சாத்தியக்கூறுகளை உருவாக்கும். நபிகள் நாயகம் அவர்களின் வாழ்வில் இதற்கான பல உதாரணங்கள் உள்ளன. அவற்றில் எந்த ஒன்றிலும் அமைதி நீதியுடன் இணைத்து பேசப்படவில்லை.

அமைதி சூழ்நிலை நீதியை கொண்டு வரும் என்பதே சரி. ஆனால் நீதி அமைதிக்கான முன் நிபந்தனை அல்ல. நபிகள் நாயகம் மற்றும் அவருடைய எதிர்ப்பாளர்களுக்கு இடையில் ஏற்பட்ட ஹுதைபியா உடன்படிக்கை இதற்கு சரியான உதாரணமாகும். இந்த அமைதி ஒப்பந்தத்தில் நீதி என்கிற விதி எதுவுமே இணைக்கப்பட்டு இருக்கவில்லை. இன்னும் சொல்லப் போனால் அந்த ஒப்பந்தம் பொதுவான தர்ம நெறிகளுக்கும், முஸ்லிம்களின் நலனுக்கும் எதிரானதாகவே இருந்தது. ஆனால் நபிகள் நாயகம் ஒரு தலைப்பட்சமான இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்டார். காரணம் இது நியாயத்தை நிலைநாட்டியது என்பதால் அல்ல, அமைதி ஏற்பட்டால் நியாயம் கிடைக்கும் என்பதால் தான் இந்த ஒப்பதத்தை செய்தார்.

> (நபிமொழியும்) திருக்குர்ஆனும் ஆழ்ந்த வாசிக்கும் போது அன்பு மற்றும் அமைதியை நேரடியாகவோ மறைமுகமாகவோ போதிப்பதை காண முடியும்

## ஜிஹாத் (கடும் முயற்சி) மற்றும் (ஃகிதால்) போர்

இஸ்லாத்தின் படி, அமைதி என்பது விதி. போர் என்பது விதிவிலக்கு. தற்காப்பு போர் என்பதிலும் நாம் முடிவை குறித்து முன் கூட்டியே ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். விளைவு சாதகமாக அமையும் என்கிற ஐயம் இருந்தால் கூட முஸ்லிம்கள் தற்காப்பு போரையும் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

ஜிஹாத்திற்கு இஸ்லாத்தில் மிகுந்த முக்கியத்துவம் உண்டு. ஆனால் ஜிஹாத் என்பது போரிடுதல் அல்ல. இஸ்லாத்தில் போர் மற்றும் சண்டை என்பதைக் குறிக்க வேறு வார்த்தைகள் உள்ளன. போர் மற்றும் சண்டையைக் குறிக்க குர்ஆனில் 'ஃகிதால்' என்ற சொல்லே பயன்படுத்தப் பட்டுள்ளது. ஜிஹாத் என்பதல்ல.

> சமாதானமே சரியான வழியென்று 05:16 திருக்குர்ஆன் கூறுகிறது.

ஜிஹாத் என்றால் கடின முயற்சி என்று பொருள். ஆகவே ஜிஹாத் என்பதை கடும் போராட்டம் என்று கூறலாம். குறிப்பாக இது அழைப்பு பணியில் செய்ய வேண்டிய ஒன்றாகும். திருக்குர்ஆன் கூறுகிறது.

"இந்த குர்ஆனைக் கொண்டு அவர்களுடன் போராடுவீராக" 25:52

குர்ஆன் என்பது ஒரு நூல் ஆகும். அது வாள் அல்ல. ஆக குர்ஆனைக் கொண்டு போராடு என்பது கருத்தியல் ரீதியான போரைத் தான் குறிக்கும். ஜிஹாத் என்பதே கடும் உழைப்பை கோரும் அமைதி செயல்பாடாகும். அந்த அமைதி செயல்பாட்டை ஆயுதமாக கொண்டு மட்டுமே இஸ்லாம் தமது எல்லா நோக்கங்களையும், இலக்குகளையும் அடைய விரும்புகிறது.

> உண்மையில் இஸ்லாம் ஆன்மீக மேம்பாடு, அறிவு வளர்ச்சி, ஆளுமைப் பண்பு, சமூக சீர்த்திருத்தம், கல்வி செயல்பாடு உள்ளிட்ட அழைப்பு பணியாற்ற அமைதி சூழ்நிலை மிக முக்கியமானது.

## இறைத்தூதர்களின் பணி

உண்மையைச் சொன்னால், ஆதாம் முதல் இயேசு (இவர்கள் அனைவர் மீது இறையருள் பொழியட்டுமாக) வரை அனைவரும் ஒரே செய்தியை, ஒரே மாதிரியான ஓரிறைக் கொள்கையை உலகம் முழுக்க நிறுவும் பணியில் ஈடுபட்டு இருந்தனர். இதன் மூலம் மக்களை இறைவனை வணங்கக்கூடியவர்களாகவும் அவனுக்கு மட்டுமே கட்டுப்படக் கூடியவர்களாகவும் மாற்ற முயற்சித்தனர். அந்த இறைத்தூதர்கள் மிகப் பழங்காலத்தில் வாழ்ந்தனர். அதனால் ஓரிறைக் கொள்கை அதன் ஆரம்ப கட்டத்தில் இருந்தது. அதனால் புரட்சிகரமாக எதையும் செய்யும் நிலையில் இல்லை. இயேசுவிற்கு பின்பு வந்த கடைசி இறைத்தூதர் காலம் வரை இதே நிலை நீடித்தது.

பழங்காலத்தில் உலகம் முழுவதும் மன்னராட்சி இருந்தது. அரசர்களின் நலனுக்காக இறைவனைப் பற்றி பேசியவர்கள் துன்புறுத்தப்பட்டனர். மன்னர்களின்